





VOL. XLVII. DECEMBER, 1910. No. 12.

# அருணோதயம்.

# ARUNODAYAM,

THE

## TRANQUEBAR MISSION JOURNAL.

நீ எழும்பி வெளிச்சமாகு, ஏனெனில் உன் வெளிச்சம் உன்னண்டை வருகிறது. எசாயா 60, 1.

பொருள் அட்டவணை.



PRINTED AT THE EV. LUTH. MISSION PRESS,
TRANQUEBAR.
1910.

## சகோதர விருத்தி மரண சகாய நிதி.

விளம்பரம்.

இந்நிதியின் கமிட்டி மெம்பர்களில் மூவர் சென்ற அக்டோபர் மீ 24-ம் உ காலை 7 மணிக்குப் பாண்டேரில் கூடி, நிதியின் கணக்குகளைச் சோதித்து, அன்று மாலை 3 மணிக்கு நடந்தேறிய கமிட்டி கூட்டத்துக்கு முன் கொண்டு வந்தார்கள். கடந்த செப்டெம்பர் மீ 30-ம் உ யோடு முடிவான மாதாந்தரக் கணக்கின்படியே கையிருப்புத் தொகை ரூ. 1526—3—1. கலியாண சகாய நிதி தொகை ரூ. 169—0—2. கமிட்டியாரின் தீர்மானத்தின்படியே சென்ற 1908-ம் ௵ டிசம்பர் மீ 31-ம் உ வரையில் ரிஜிஸ்தரான மெம்பர்கள், தங்கள் பாத்தியம் அற்றுப்போகாதபடிக்கு, தங்கள் மூ. தி. பி. கட்டணப் பாக்கியை நாளது ௵ டிசம்பர் மீ 31-ம் உக்குள், பொக்கிஷதாரி சங். R. ஷோமேருஸ் ஐயரவர்களுக்குக் கட்டவேண்டியது.

தங்கள் பாக்கியை அறிய விரும்புவோர் ரிப்ளை கார்டு அனுப்பவேண்டியது. நாளது நவம்பர் மீ முதல் உ வரையில் ரிஜிஸ்தரான மெம்பர்கள் 451. இன்னும் 149 பேர் தேவை. ஏழைக் கிறிஸ்தவர்களுக்கு இந்நிதியில் சேர இதுவே சமயம்.

பாண்டேர், } இஸ்ரவேல் நல்லப்பா,
திருவள்ளூர். M. S. M. R. } காரியதரிசி.

---

## அறிக்கை.

புதியநிருப சுவிசேஷ வாக்கிய விஸ்தரிப்புக்காக ஏற்பட்ட பிரசங்க விளக்கம் என்ற பத்திரிகை ஏறக்குறையத் தன் வேலையை முடித்துவிட்டதால் இனிப் பிரசுரமாக மாட்டாது.

பத்திராதிபர்.


# அருணோதயம்.

தரங்கன்பாடி

மிசியோன் பத்திரிகை.

No. 12. டிசம்பர். 1910.


## இயேசுகிறிஸ்து எல்லாவற்றிற்கும் மேலான தலை.

"எல்லாவற்றையும் அவர் பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தி, அவரை எல்லாவற்றிற்கும் மேலான தலையாகச் சபைக்குக் கொடுத்தார்" எபே. 1. 22.

திருச்சபையானது இரட்சகரின் உன்னத அன்புக்குரியது. அவர் அதைச் சிநேகித்ததால், அதற்கென்று தம்மையே தத்தமாய்த் தந்தார். ஆகையால் திருச்சபையின் நன்மைக்கென்று எல்லாவற்றிற்கும் மேலான தலையாயிருப்பது அவருக்குப் பிரியம். சகலத்தையும் இயேசுவின் திருப் பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தியாயிற்று. அவரையன்றி, ஒரு அற்பப் பிராணியும் தன் நாவை அசைப்பதில்லை. (2 மோ. 11. 7.) இயேசுவே எல்லாவற்றிற்கும் மேலானவர். பரமண்டலத்திலும் பூமண்டலத்திலும், சகல காரியங்களையும் தமது ஜனத்தின் நன்மைக்கென்று நடப்பித்து ஆட்சிசெய்கிறவர் அவரே.

அவர் திருச்சபைக்கும் தலை. திருச்சபையானது அவரது சரீரம். திருச்சபையாகிய சரீரத்தின் ஒவ்வொரு அவயவமும் இயேசுவுடன் சிறந்த விதமாய்ப் பொருந்தியிருப்பதுமன்றி அவரில் சார்ந்திருந்து, அவரால் அநுதினமும் போஷிப்பும் பெற்று வருகிறது. அவர் திருச்சபைக்காகக் கண்டு, கேட்டுப், பேசி, உணர்ந்து, கரிசனப்படும் அதின் சிரசாக இருக்கிறார்.

அன்றியும் அவர் சகலருக்கும் ஆண்டவரும் அதிபதியும் எல்லாவற்றிற்கும் மேலான தலையாகவும் இருக்கிறார். சகலமும் அச்சர்வஞ்ஞரின் கண்களுக்கு முன்பாகப் பட்டப்பகலும் வெட்டவெளிச்சமுமாயிருக்கிறது; சகலத்தையும் அவரது சர்வ வல்

லபம் தாங்குகிறது; சகலத்தையும் அவரது சர்வ ஞானம் நடத்துகிறது. அவர் கட்டளையின்றி ஒரு அடைக்கலான் குருவி முதலாய்த் தரையில் விழாது.

ஒருவன் எல்லாவற்றிலும் இயேசுவைக் காணும் காட்சியே காட்சி! அனைத்தும் இயேசுவால் ஆளப்படும் ஆட்சியே ஆட்சி! சகலமும் இயேசுவால் நமது நலத்திற்கென்று நடத்தல் பெறும் மாட்சியே மாட்சி! ஆ! இவ்வெண்ணம் சஞ்சலப்படும் நமது சிந்தையைச் சாந்தப்படுத்தி, அலைந்துழலும் நமது ஆவியை அமர்த்துவதாக!

இவ்வருஷ முழுமையும் இயேசுகிறிஸ்து ஒருவரே நமக்கு எல்லாவற்றிலும் எல்லாம் என்று சிந்தித்த நாமனைவரும் நமது சித்தமடங்கலும் அவரது திவ்விய சித்தத்துக்குக் கீழ்ப்படுத்துவோமாக! அவர் ஒருவரே எல்லாவற்றையும் கிரமப்படுத்தி, நடத்தி ஆளுகிறவர். அவரே எல்லாவற்றிற்கும் மேலான தலை.

"அவரே சபையாகிய சரீரத்துக்குத் தலையானவர்" கொலோ. 1. 18.

"சபைக்குச் சிரசான நீர்
அவயவங்களான
அடியார்க் காதரவாவீர்" பிரா. 71, 7.

C. I. S.

## அடிமையும் அரசனுமான எரஸ்து. (தொடர்ச்சி.)

மூவாங்கா இராஜாவினால் ஏற்பாடான அடிமை வியாபாரத்தில் அகப்பட்ட இப்பையனை முசிக்கோ என்னும் புது எசமான் மெங்கோவுக்கு அழைத்து வந்தான். இப்பையனின் சிறு பிராயம் ஆபிரிக்காவின் சிறு பையன்களின் காலப்போக்குக்கு ஒத்ததாயிருந்ததில்லை. அவனோடொத்த தோழர்கள் அவனைப் பார்த்துப் பரிகாசம்செய்து சிரிப்பதும், காசிசி என்னும் நிந்தைப் பெயரால் அவனை அழைத்துப் பகிடிபண்ணுவதும் வழக்கம்.

ஆபிரிக்காவிலுள்ள சிறு பையன்களுக்குக் கழி விளையாட்டுகளும் மல்யுத்தங்களும் நன்றாய்த் தெரியும். அடுத்த கிராமங்களிலுள்ள சிறுவர்களோடு போர்புரிவதும், ஆடுமாடுகளில் ஏறிச் சவாரிசெய்து தவறி விழுந்து விளையாடுவதும், அப்பையன்களின் பெரியோர் குடித்து வெறித்து, தம்புரு முதலிய வாத்தியங்களை முழக்கிக் கூத்தாடும்போது இவர்களுஞ் சேர்ந்து கூத்தாடுவதும் சகஜம். நாகூ என்ற இப்பையன் பெரியவனானதும், ஆடுமாடு



களை மேய்ப்பதைவிட்டு, தன் எஜமான் எங்கெங்கே போகிறாரோ அங்கேயெல்லாம் அவருடைய பாய் மெத்தை முதலியவைகளை எடுத்துப் போவான். முசிக்கோ என்னும் எசமானுக்கு நாமிரம்பி என்ற குன்றில் ஒரு பங்களாவிருந்தது. அங்கே ஒரு மிஷியோன் ஸ்தாபமாகி நூற்றுக்கணக்கான ஜனங்கள் கிறிஸ்துமார்க்கத்தையனுசரித்திருக்கிறார்கள்.

மூவாங்கா, தான் ஒருதரம் அங்கிலேயரோடு செய்த உடன்படிக்கையை நிறைவேற்றுததால், அவர்களுக்குப் பயந்து கொண்டு அவ்வூரைவிட்டு ஓடிப்போனான். அவனுக்குப்பின் அவ்வூருக்குப் பெரிய மனுஷனும் கிறிஸ்தவனுமான கதிக்கீரோ என்பவன் மந்திரியாயிருந்தான். அவன் அடிமைகளையெல்லாம் விடுதலை செய்யும்படியான கட்டளை பிறப்பித்தான். இக்கட்டளைப்படி நாமிரம்பி குன்றின்மேலிருந்த ஜனங்களண்டை ஓர் ஆள் வந்து, பூனியோரோ நாட்டிலுள்ள ஓர் இஸ்திரியின் பிள்ளை காணாமற்போனதாகவும், அடிமை வியாபாரிகள் அவனை விற்றுப்போட்டதாகவும், அவனுக்குத் தற்காலம் 13 வயதிருக்குமென்றும், அவன் இராஜ குமாரனானதால் அவனை அந்த இஸ்திரி தேடிக்கொண்டிருக்கிறாள் என்றும் சொல்லி, இங்கு அப்பேர்ப்பட்ட அடிமைப்பையனிருந்தால் அவனைப்பார்த்து கதிக்கீரோ விடுதலை செய்வதாய் வாக்களித்தார் என்றுங் கூறினான்.

இச்சமாசாரத்தைக் கேள்விப்பட்ட முசிக்கோ, எங்கே தான் பூனியோரோ இராஜாவிடமிருந்து திருடிவந்த இந்த நாகூ என்ற பையனை அழைத்துக்கொண்டு போய்விடுவார்களோ வென்று பயந்து அவனைக் கூப்பிட்டு, அவசரமான வேலையாய்க் கிராமத்துக்குப் போகவேண்டுமென்று சொன்னான். அவனை விட்டுவிட அவனுக்கு மனதில்லாததினாலும் அவனைப்போலத் தன் கவைகாரியங்களைச் சுறுசுறுப்பாயும் உண்மையாயும் பார்க்கக்கூடிய வேறொரு அடிமையில்லாததினாலும் அவன் ஊரில் இல்லாதபடி வெளியே அனுப்பிவிட்டான். அவனைத் தேடிக்கொண்டு வந்த தாயாரோ அவனைப் பார்க்கக் கூடவில்லை.

ஒருநாள் சில சுதேச உபாத்திமார் மேற்சொன்ன கிராமத்தாரண்டை வந்து வேத புஸ்தகங்களை வாசித்துக்காட்டி அக்கிராமத்தாருக்கு வேதம் பயிற்றுவிக்க மிகவும் பிரயாசைப்பட்டார்கள். இதற்காகச் சில பள்ளிக்கூடங்களைக் கட்டிப் படிப்பை விர்த்திபண்ணினார்கள்.

இது புது ஞானம் புது ஞானம் என்று சொல்லிக்கொண்டு அநேகர் கூட்டங்கூட்டமாய்ப் படிக்க வந்தார்கள். எது புதுமையோ, அது நல்லதானாலும் கெட்டதானாலும், உடனே அதில் அவர்கள் மனங் கவிழ்ந்துவிடும். நாகூ என்பவனும் அக்

கூட்டத்தோடு சேர்ந்து படிக்க ஆசைப்பட்டும், அவன் எசமான் அதற்கிடங் கொடுக்கவில்லை. நாகூவைத் தான் இழந்துபோக நேரிடுமோ என்கிற பயத்தால் அவன் படிக்காதபடி அநேக இடைஞ்சல்களை உண்டுபண்ணினன். ஆகிலும் நாகூ என்பவன் அந்த உபாத்திமாரோடு பேசிப்பழகி, இயேசுகிறிஸ்துவின் சுவிசேஷத்தையும் அவர்பேரில் விசுவாசிக்கும் யாவரையும் விடுதலை செய்யும் அவரது வல்லமையையும் அறிந்துகொண்டான்.

சொற்பவிலைக்கு விற்கும் சுவிசேஷங்களையும், துணி போட்டுக் கட்டி வார்னிஷ்கொடுத்த அப்போஸ்தல நடபடிப் புத்தகங்களையும் அவைகள் வாசனையுள்ளவைகளாயிருந்ததால், தனக்கிருந்த 20 கவரிப்பணத்துக்கு வாங்கினன். சிலநாட்களாக அதை இங்குமங்கும் எடுத்துப்போய் மோந்து மோந்துகொண்டிருந்தான். எப்படியாகிலும் தான் அதை வாசிக்கவேணுமென்கிற பேராவல் கொண்டான். ஆகையால் தன் எஜமான் இஷ்டத்துக்கு விரோதமாக ஒரு வகுப்பில் சேர்ந்து வார்த்தைகளை உச்சரிக்கவும் எழுத்துக் கூட்டவுங் கற்றுக்கொண்டான். இயேசுவையும் அவரது சிநேகத்தையுங் குறித்து உபாத்திமார் சொன்ன யாவையும் வெகு கவனமாய்க் கேட்டுப்படித்தான். தன் எசமானுடைய கோபத்துக்குப் பயந்து வெகு அந்தரங்கமாய்ப் படித்து வந்தான். அவனுடைய சேர்த்தாளிகளும் அவனை ஏசிப் பேசினர்கள். குடிகாரரானவர்களோ அவன் பூர்வீக வழக்கங்களை அனுசரியாமல் போகிறபடியால் காசிதாலா என்னும் நிந்தைப் பெயரால் அழைத்தார்கள். இதையும் அவன் சட்டைபண்ணவில்லை.

இப்படியிருக்க, நாகூவுக்கும் அவனுடைய புதிய விசுவாசத்துக்கும் சோதனைக்காலம் வந்தது. அவனுக்கு விஷசுரம் கண்டு சாகக் கிடந்தான். முசிக்கோவும் அவனைச் சேர்ந்தவர்களும் அவனைப் பரிகாசம்பண்ணி மார்க்கத்தைப்பற்றி வாசித்துத் தன்னை வணங்காமல் விட்டதினால் பிசாசு அவனைத் தண்டிக்கத் தொடங்கியிருக்கிறது என்றார்கள். ஆடு கோழி வெட்டிச் சுகங்கொடுக்கப் பார்த்தார்கள். அதினாலும் பயன் படவில்லை.

முசிக்கோ, இதனாலும் பிரயோஜனமில்லை, நாம் அவனைச் சுகப்படுத்த முடியாது, பூனியோரோ வைத்தியருக்குச் சொல்லி நாகூவைப் பிடித்திருக்கிற விசேஷித்த பிசாசைக்கொண்டு அவனுக்கிருக்கிற வியாதியை நீக்கச் சொல்லவேண்டும் என்றார்கள். அப்படியே ஒருவன் வந்து ஆடுகளையும் கோழிகளையும் வாங்கி நாகூவுக்கு வைத்தியஞ் செய்தான். இப்படிச் செய்தும் காய்ச்சல் மும்முரித்தது.

பிறகு தெய்வச்செயலாய்ச் சுகமாகி, வரவரப் பெலப்பட்டான். அவன் சுகமானதைக் கண்ட முசிக்கோ, வைத்தியர் செய்த மந்திரத்தினால்தான் சுகமுண்டாயிற்று; இனிப் பிசாசின்



வணக்கத்தை நிறுத்துவாயாகில் மறுபடியும் வியாதிப்படுவாய் என்றெச்சரித்தான். அப்படி எச்சரித்தும், ஞானஸ்நானத்துக்குப் படிக்கிறவர்களோடு தானும் சேர்ந்து படித்து ஞானஸ்நானம் பெறப் பிரியப்பட்டான். அவனோடு படித்தவர்கள் அவனை அழைத்துவந்து ஹென்ரிறைட்டா என்ற ஐரோப்பிய குருவினிடம் விட்டார்கள். ஹென்ரி என்பவர், முசிக்கோ நாகூவை விடத் தடைசெய்யக் கூடாதென்றும், ஏதாகிலும் குதாவிடை செய்யும் பட்சத்தில், நாகூ யாதொரு பயமுமின்றித் தமது பங்களாவிலிருக்கலாமென்றும் சொன்னர்.

நாகூ என்பவன் தன்னை அடிமைகொண்ட எசமானகிய முசிக்கோ வரவர எரிச்சலாகிக் கண்டபடி தன்னை ஏசிப் பேசுவதால் ஐயர் சொன்னதையே தெரிந்துகொண்டான். அடிமைகளை எல்லாம் விடுதலைசெய்ய வேண்டுமென்று விளம்பரத்தால் முசிக்கோ அறிந்திருந்தும், நாகூவை விடமாட்டேன் என்றது மூடத்தனமே.

ஹென்ரி ஐயரின் ஆதரிப்புச்சாலைப் பிள்ளைகள் நாகூவை அதிகமாய்ச் சிநேகித்து, (துப்பாக்கிகள் பிரித்துப்போடும்) என்று அர்த்தமுள்ள சீரியாலாவோ என்ற புதுப் பெயரை இட்டு அழைத்தார்கள். துப்பாக்கிகள் உன்னை உன் ஜனங்களிலிருந்து உண்மையாகவே பிரித்துப்போடும் என்று அதற்கு நியாயஞ் சொன்னர்கள்.

நாகூ நமிரம்பிப் பள்ளிக்கூடத்திற்கு வெகு ஒழுங்காய்ப் போனன். *இதுமுதல்தான் நான் அவனை அறிவேன். என்பேரில் அவனுக்கு மெத்தப் பிரியம். அடிக்கடி என்னை வந்துபார்த்து முட்டைகளைக் கொடுத்துப் போவான். அவன் புத்திக் கூர்மையுள்ளவனும் கெட்டிக்காரனுமாயிருந்தான். சீக்கிரம் படித்து ஞானஸ்நானம்பெற ஆயத்தமாயிருந்தான். ஞானஸ்நானத்தில் ஏராஸ்துஸ் என்ற 4ம் பெயர் கொடுக்கப்பட்டது. (உகாந்தாவில் ஏராஸீத்தோ என்று எழுதப்படும்.)

நாகூ உண்மையுள்ளவனென்று ஹென்ரி ஐயர் கண்டு, முதலில் அவனை ஜாமான்களை வைத்துக்கொள்ளும் ஆளாக நியமித்துப் பிறகு தன் வீட்டுக் காரியஸ்தனாக்கினர். பிறகு, என்னிடம் எரஸ்துவை விட்டால், அவனைப் படிக்கவைத்து உபாத்தியாயராக்குவேன் என்று ஹென்ரி ஐயரைக் கேட்க, அப்படியே அவர் சம்மதித்தார். அவனும் சீக்கிரம் படித்துக் கிராமத்து உபாத்தியாராக நான் அவனை வெளியே அனுப்பினபோது எனக்குண்டான விசனத்துக்கு மட்டில்லை.

---

*பின்வரும் வார்த்தைகள் இச்சரித்திரத்தை எழுதிய ஹாட்டர்சிலி என்பவருடையவை.

அவன் உபாத்தியாராக கயாஜாவில் அடைந்த ஜெயம் ஆச்சரியமானது. அந்தக் கிராமத்தில் திருப்பணி செய்த என் சகோதரியும் அதற்குச் சாட்சி. அக்காலத்தில் சுதேச குருவாகிய பர்த்தலோமேயோ முசிசாக்கியின் மகளை மணம்புரிந்து கொண்டான். இவள் உகாந்தாவிலுள்ள கிறிஸ்தவப் பெண்களுக்கெல்லாம் உத்தம முன்மாதிரியாயிருந்தாள். நல்ல பெண்சாதியும் பிள்ளைகளை வளர்க்கும் நற்றாயுமாயிருந்தாள்.

நான் சுதேச தலைவர்களுக்கும், தலைவர் பிள்ளைகளுக்கும் உயர்தரப் பள்ளிக்கூடங்களை ஸ்தாபிக்கையில், தகுந்த உதவி உபாத்தியாயர் அகப்படாமையால், எரஸ்துவையே எனக்கு இரண்டாவதாக வைத்துக்கொண்டேன். பிள்ளைகளை நடத்துவதில் அவன் காட்டின புத்திசாலித்தனமும் அதிகம். அவன் எனக்கு வலது கைபோலிருந்தான்.

கொஞ்சக்காலத்துக்குமுன் உகாந்தாவில் பல பொருள் காட்சிசாலை ஒன்று ஏற்பாடாயிற்று. அதற்குப் பூனியோரோ, தோரோ, அங்கோலி என்ற நாடுகளிலிருந்து மூன்று இராசாக்களும் அநேக பிரபுக்களும் தங்கள் மனுஷரோடும் தங்கள் ஊர்களிலிருந்து அநேக விநோதப் பொருள்களோடும் வந்தார்கள். சண்டைபோடுகிறதற்கென்றல்ல, ஆண்டவருக்குத் துதிதோத்திரஞ் செலுத்துகிறவர்களாக இந்த மூன்று இராசாக்களும் கூடி வந்தார்கள். இவர்களோடு நாலாவதாக தாவூதி என்கிற இராசாவும் வந்தார். விசேஷித்த ஆராதனைகள் நடந்தன. சர்க்காரால் வெகு விமரிசையாய் வரவேற்கப்பட்டனர். உயர்தரப் பள்ளிக்கூட மாணக்கர் மூன்று இராசாக்களுக்கு விருந்து செய்தபின்னர், பாட்டுக் கச்சேரியும் வைத்து அவர்களைச் சந்தோஷப்படுத்தினர்.

பூனியோரோவின் தற்கால இராசாவாகிய அந்திரேயா என்பவருடைய மூன்று பிள்ளைகளும் நமது கதை ஆரம்பிக்கையில் இராசாவாயிருந்த காபாரீகா என்பவருடைய எல்லாக் குமாரர்களும் பள்ளிக்கூடத்தில் படித்தார்கள். இந்த இராஜ குமாரருடன் ஏராஸீத்தோ என்பவனும் அந்திரேயா இராஜாவைப் பார்க்கப்போனான். பூனியோரோவின் ஜனங்களின் நெற்றிகளிலும் மார்புகளிலும் ஒவ்வொரு குடும்பத்துக்கும் வெவ்வேறான அடையாளமிருக்கும்படி சூடுபோட்டுக்கொள்வது வழக்கம். அந்திரேயா இராஜா கொஞ்சநேரம் பேசிக்கொண்டிருந்து ஏராஸீத்தைக் கூப்பிட்டு, உன் நெற்றியிலுள்ள உன் அடையாளத்தை நான் பார்க்கும்படி கிட்ட வா, முகந்தனைப்போலப் பேசுகிறாய். அந்த அடையாளங்கள் நீ மூனியோரோ என்றும் சாதாரண ஒரு மனுஷனல்லவென்றுங் காட்டுகின்றனவென்றார். அதற்கு எரஸ்து, நான் முகந்தனல்ல. இங்கே வெகு காலமாயிருந்து விட்டப



டியால், ஜாடை சைக்கினைகளிலெல்லாம் முகந்தனைப்போலிருக்கிறேன் என்றான்.

அப்படியானால் உன் உட்சட்டையின் மூகப்பைக்காட்டு. உன் மார்பிலுள்ள உன் ஜாதியடையாளத்தைப் பார்க்கிறேன் என்று இராஜா கேட்க, எரஸ்து அப்படியே காட்ட, இராஜா: என் தம்பியே, உன் சரித்திர விருத்தாந்தத்தையும், இங்கு எப்போது கொண்டுவரப் பட்டாயென்பதையும் சவிஸ்தாரமாய்ச் சொல்லு என்று கேட்டார். அவன் தன் சரித்திரத்தை ஆதியோடந்தமாய்க்கூற, இராஜா, நான் நினைத்ததுபோலவே நடந்திருக்கிறது. உன்னை எங்குந் தேடிப்பார்த்தும் அகப்படாமையால், நீ செத்துப்போனாயென்றே நினைத்துக்கொண்டோம். உன் நெற்றியிலிருக்கும் அடையாளத்தால் நீ எங்களுக்கு நெருங்கிய பந்து என்று தெரிகிறது. நீ காபாரீகாவின் மகனல்ல, பூனியோரோவின் விசேஷித்த இராஜ குமாரனாகிய அவருடைய சகோதரனின் மகன். அதின்படியே நீ என் சொந்த சகோதரன். நான் ஊருக்குப் போகும்போது நீயும் என்னோடு வரவேண்டும். உன்னுடைய மற்றச் சொந்தக்காரருக்கெல்லாம் உன்னைப் பழக்கம் பண்ணி வைப்பேன் என்றார்.

அடிமைப் பையன் இராஜ குமாரனாய் வெளிப்பட்டது என்ன ஆச்சரியமான சங்கதி. ஒன்றுந் தெரியாத கேவல நிலைமையிலிருந்து இராஜ அந்தஸ்து வெளியானதால் எரஸ்துவின் சந்தோஷத்துக்குச் சொல்லிக்கொள்ள வேணுமா? இவ்வளவு காலம் வெகு அற்பனாக எண்ணப்பட்டவன் பெரிய மனுஷனாக மதிக்கப்படுவது அவனுக்கே அதிக சந்தோஷத்தை விளைவித்தது. என் தாயும் தந்தையும் இன்னும் உயிரோடிருக்கிறார்களா வென்று கேட்டான். அதற்கு இராஜா, உன் தகப்பனார் செத்து வெகு வருஷங்களாயிற்று. அவரை எனக்கு நன்றாய்த் தெரியும். உன் தாயாரைப்பற்றி ஒன்றுந் தெரியாது. அவளைப் பற்றிய பேச்சுமில்லை. ஒருவேளை அந்த அம்மாள் எங்கேயாகிலும் உயிரோடிருக்கலாம். நீ காணமற்போனபோதுதான் உன் அண்ணனும் எங்கேயோ போய்விட்டான். சில வருஷங்களுக்கு முன் அவன் எங்களை வந்துபார்த்து உன்னைப்பற்றியும் பெற்றோரைப்பற்றியும் விசாரித்துப் போனான். அங்கோலில் சர்க்கார் சேவகனாயிருந்தான். பிறகு இறந்துபோயிருப்பானென்று நினைக்கிறேன் என்றார்.

திருவுளச் செயலின் மகத்துவத்தை என்னென்று சொல்ல!! இங்கே எரஸ்து தன் சொந்த சகோதரருக்கு உபாத்தியாயிருப்பது எவருக்குந் தெரியாத விஷயம். தன் சரித்திர வரலாற்றை யாருக்குஞ் சொன்னவனுமல்ல. உகாந்தாவில் வெகு காலமாயிருந்து விட்டபடியால், தன் உறமுறைப் பாத்தியத்தை

யெல்லாம் நினைப்பதை விட்டுவிட்டான். "நம்முடைய நாமம் பூமியெங்கும் பிரஸ்தாபமாகிறதற்கு உன்னை நிறுத்தினேம்." (2 மோசே 9, 16) என்கிற வேதவாக்கியம் எரஸ்து என்பவரிடத்தில் உண்மையாய் எழுத்தின்படியே நிறைவேறிற்று. அவன் உகாந்தாவிலிருந்த வருஷங்களிலெல்லாம் தன் சகோதரரைப் பயிற்றுவித்தான். இவன் ஒருவாறு தன் சகோதரர்களை இரட்சித்த யோசேப்பைப்போல் இவ்விடம் கொண்டுவரப்பட்டிருக்கிறான். இவனுடைய செல்வாக்கு அவனுடைய சகோதரருக்கு அநேக நன்மைகளை விளைவித்திருக்கும்.

உகாந்தாவிலுள்ள பூனியோரா நாடு இன்னமும் அஞ்ஞான இருள் சூழ்ந்திருந்ததால், அநேகர் கிறிஸ்துவின் தோழத்தில் சேரவில்லை. இராஜாவாகிய அந்திரேயா கிறிஸ்தவராயிருந்தும் அவர் பிரஜைகளில் பலர் பிசாசின் சங்கிலிகளால் கட்டுண்டிருந்தார்கள்.

நமது எரஸ்து, இராஜாவின் விருந்தாடியாகப் பூனியோராவுக்கு வந்தார். தமது இன ஜனத்தைக்கண்டு களித்தார். தங்கள் பேரனும், தங்கள் சகோதரனும் இறந்துபோய்விட்டான் என்று நினைத்தவர்கள் யாவரும் இவரைப்பார்த்து அடைந்த ஆனந்தத்துக்கு அளவில்லை. அவரது தாயாரைப்பற்றி ஒருவருக்கும் ஒன்றுந் தெரியாது. வயதுசென்றவளாய்க் கேவலமான ஒரு குக்கிராமத்திலிருக்கலாம். தம் தாயாரைப் பார்க்கவேணுமென்பதே அவருக்கிருந்த பேராவல்.

எரஸ்து, பிரிந்துபோனவன் என்றர்த்தங்கொள்ளும் சீ ரி ய ா ல ா வே ா என்றழைக்கப்படாமல், தன் இனத்தாரோடு சேர்ந்துகொண்டபடியால் கா ல ா ம ா கி என்ற ஜாதிப் பெயரை வைத்துக்கொண்டார்.

நிசமாய் நடந்த இக்கதையை வாசிப்போர், எராஸித்தோ காலாமாகி என்பவர் தமது சகோதரர்களுக்குப் படித்துக்கொடுத்து அவர்களையும், அவ்வூராரில் பலரையும் இரக்ஷிப்பின் பாதையில் நடத்தும்படி அவரை முன்னுக்குக் கொண்டுவந்த கர்த்தருக்குத் துதிதோத்திரஞ் செய்ய எங்களோடு சேர்ந்து கொள்வார்களென நம்புகிறேம்.

எராஸித்தோ என்பதற்குப் பிரியமானவர் என்றர்த்தம். அவர் உள்ளபடியே ஆண்டவருக்குப் பிரியமானவரும் ஆண்டவர் தெரிந்துகொண்டவரும் ஆண்டவரின் அழைப்புப் பெற்றவருமாயிருந்தார். அவர் இன்னமும் என்னேடு உயர்தரப் பாடசாலையில் உபாத்தியாராயிருந்தார். உகாந்தா நாட்டாருக்கு நன்றியறிதல் என்னும் குணம் அபூர்வமாயிருந்தாலும், எரஸ்து என்பவர் நாங்கள் அவருக்குச் செய்தவைகளுக்காக மெத்த நன்றியுள்ளவராயிருக்கிறர். அவருடைய ஜீவியத்தின் முந்தின



பாகத்துக்கும் அவரது பிள்ளைகளின் இளமைப் பருவத்திற்கும் எவ்வளவோ வித்தியாசம்.

நாலு வயதுள்ள அவருடைய குமாரனுக்கு என் பெயர் கொடுக்கப்பட்டது. அப்பையன் என்னைக் கிறிஸ்துவுக்குள் தகப்பனாக எண்ணி அடிக்கடி என் வீட்டுக்கு வந்து பள்ளிக்கூடத்துக்கும் வெகு சந்தோஷமாய்ப் போவான். எராஸ்துவுக்குத் தகப்பன் சொத்து கிடைக்குமோவென்பது சந்தேகம். பூமிக்கடுத்த அவனுடைய ஆஸ்தி கிடைக்காதேபோனாலும் அழியாததும் திருடர் கன்னமிட்டுத் திருடக்கூடாததும் அவரைவிட்டு எடுபடாததுமான நித்திய சுதந்தரம் அவருடையதாயிருக்கிறது.

ஆண்டவர் இவ்வளவு அற்புதமாய் எரஸ்துவை ஜீவகாலமெல்லாந் தாங்கி, அவர் ஜீவனைப் பாதுகாத்து, தமது நாமமகிமைக்கென்றும் தமது இராச்சிய பரம்புதலுக்கென்றும் வைத்து நடத்திவந்ததால் வெகு மனரம்மியமுடையவராய் இருக்கிறர்.

பூனியோராவின் தலைநகரமாகிய ஹோய்மாவுக்குப்போய் அங்கே லாயிட் துரையவர்கள் அந்நாட்டுக்குத் தலைவரின் பிள்ளைகளுக்கென்று ஏற்படுத்திய உயர்தரப் பாடசாலையில் உதவி உபாத்தியாராகத் தீர்மானஞ் செய்ததின்பேரில் அங்கே வந்து கர்த்தருக்கு ஊழியஞ் செய்தார். நிச்சயமாகவே இதிலெல்லாம் கர்த்தருடைய கரமிருப்பதைப் பார்க்கிறேம். "இதற்கென்றே நாம் உன்னை நிறுத்தினேம்" என்ற வேதவாக்கு எரஸ்து என்பவரிடத்தில் சரிவர நிறைவேறுகிறது. இருபது வருஷங்களுக்கு முன்னே சிறு பாலகனை அடிமையாகக் கொண்டுபோகப்பட்டு, இன்னுனென்று ஒருவனுக்குந் தெரியாமல் பிறகு திடீரென்று இராஜ பிள்ளையாக வெளியாகி, ஏழு வருஷம் உபாத்தியாராக அமர்ந்து, தன் சொந்த ஜனங்கள் நடுவில் உழைக்கக் கர்த்தர் இவரைத் தெரிந்துகொண்டது எவ்வளவு ஆச்சரியம். அவருடைய அந்தஸ்தினுலும் சரித்திரத்தினுலும் அவருக்கு அதிக செல்வாக்குண்டென்பதற்குச் சந்தேகமில்லை. அவர் ஒரு சிறந்த மனுஷன். அவரை விட்டுப்பிரிவது ஆருத்துயரம். ஒரு விசேஷித்த வேலைக்கென்று கர்த்தர் ஆயத்தப்படுத்தியிருப்பவரைத் தடுக்கக்கூடியவர் யார்?

இச்சரித்திரத்தை வாசிக்கிற நமதிஷ்டர்கள் யாவரும் இவர் அநேக ஆத்துமாக்களைத் தமது பரம எசமானிடம் நடத்தும் நல்ல வழிகாட்டியாயிருக்க அவருக்காக ஜெபிப்பார்களாக.

## பெருமை.

நமது கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் ஜீவியமும் அவர் மரணமும் நமது சகல கர்வத்தையும் அடக்கி அதமாக்கும் சம்மட்டி. அதினுல் எவ்வித பெருமையும் பின் வருமாறு நற்போதனையை அடையும்.

| | |
|---|---|
| உயர்குலப் பெருமை. | "இவன் தச்சனுடைய குமாரனல்லவோ?" மத். 13, 55. |
| செல்வப் பெருமை. | "மனுஷகுமாரனுக்கோ தலைசாய்க்க இடமில்லை." மத். 8, 20. |
| கண்யப் பெருமை | "நாசரேத்திலிருந்து யாதொரு நன்மை வரக்கூடுமோ?" யோவான். 1, 47. "நாசரேயன் என்றழைக்கப்படுவார்" மத். 2, 20. |
| தேக அழகின் பெருமை. | "நாம் அவரை இச்சிக்கத்தக்க ரூபு அவருக்கு இல்லாதிருந்தது" எசா. 53, 2. |
| கீர்த்திப் பெருமை. | "இதோ, போசனப் பிரியனும் மதுபானனுமான மனுஷன். ஆயக்காரருக்கும் பாவிகளுக்கும் சிநேகிதன்" மத். 11, 19. |
| தன்னிஷ்டப் பெருமை. | "தங்கள் ஆஸ்திகளால் அவருக்கு ஊழியஞ் செய்துகொண்டிருக்கிற அநேகர் உண்டு" லூக். 8, 3. |
| கல்விப் பெருமை. | "இவர் கல்லாதவராயிருந்தும், வேத எழுத்துக்களை எப்படி அறிந்திருக்கிறார்" யோவான் 7, 15. |
| உயர்வை நாடும் பெருமை. | "நானோ உங்கள் நடுவில் பணிவிடை செய்கிறவனைப்போலிருக்கிறேன்." லூக். 22, 27. "தம்மைத்தாம் தாழ்த்தினார்" பிலி. 2, 8. "கிறிஸ்து நமக்காகச் சாபமானார்" கலா. 3, 14 |
| சித்திபெற்றால் வரும் பெருமை. | "தமக்குச் சொந்தமானதிலே வந்தார், அவருக்குச் சொந்தமானவர்களோ அவரை ஏற்றுக்கொள்ளாதே போனார்கள்" யோவா. 1, 11. "அவர் சகோதரரும் அவர்பேரில் விசுவாசியா |



| | |
|---|---|
| | திருந்தார்கள்" யோவா. 7, 5. "அவர் அசட்டைபண்ணப்பட்டவரும் மனுஷரில் ஈனமானவருமாயிருந்தார்" எசா. 53, 3. |
| தன் சக்தியையே நம்பும் பெருமை. | "அவர்களுடனே கூட நாசரேத்துக்குவந்து அவர்களுக்குக் கீழ்ப்படிந்திருந்தார்." லூக். 2, 51. |
| சாமர்த்தியப் பெருமை. | "நானுய் ஒன்றுஞ் செய்யமாட்டேன்" யோவா. 5, 30. |
| சுய சித்தப் பெருமை. | "எனக்குச் சித்தமானதையல்ல, என்னை அனுப்பின பிதாவுக்குச் சித்தமானதைத் தேடுகிறேன்" யோவா. 5, 30. |
| அறிவின் பெருமை. | "என் சுயமாய் நான் ஒன்றுஞ் செய்யாமல், என் பிதா என்னைப் போதித்தபடியே இதுகளைச் சொன்னேன்." யோவா. 8, 28. |
| மத வைராக்கியப் பெருமை. | "அவனுக்குத் தடை சொல்லாதேயுங்கள் ... ... ... அதேனென்றால் நமக்கு விரோதமாயிராதவன் நமக்கானவனுயிருக்கிறான்." மாற். 9, 39. 40. |
| கோபப் பெருமை. | "பிதாவே, அவர்களுக்கு மன்னியும். ஏனெனில் தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியார்கள். லூக். 23, 34. "சிநேகிதனே, ஏதுக்கு வந்திருக்கிறாய்?" மத். 26, 50. |
| தான் தோன்றியாய்த் திரியும் பெருமை. | "என் ஆத்துமம் மரணபரியந்தம் கன துக்கமாயிருக்கிறது. நீங்கள் இங்கே தரித்து என்னோடு கூட விழித்திருங்கள்." மத். 26, 38. "மனுஷனுடைய குமாரன் அநேகம் பாடுபடவும் தள்ளுண்கவும் வேண்டியது." லூக். 9, 22. |
| தான் பரிசுத்தன் எனும் பெருமை. | "இவர் பாவிகளை ஏற்றுக்கொண்டு அவர்களுடனே சாப்பிடுகிறார்." லூக். 15, 2. "என்னிடத்திலே கற்றுக்கொள்ளுங் |

கள். அதேனென்றால் மெத்தனவும் மனத்தாழ்மையுமாயிருக்கிறேன்'' மத். 11, 29.

"நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய சிலுவையினாலே ஒழிய வேறொன்றாலும் மேன்மை பாராட்டல் வேண்டாம். இவரால் எனக்கு லோகம் சிலுவையில் அறையுண்டிருக்கிறது. லோகத்துக்கு நானும் அப்படியே இருக்கிறேன்.'' கலா. 6, 14.

## கர்மானிய சக்கரவர்த்தியும் சத்திய வேதமும்.

கர்மானிய தேசத்துச் சக்கரவர்த்தி ஒரு நாள் புருஷிய தேசத்துப் புரோடெஸ்தாந்து சபையின் பெரிய உத்தியோகஸ்தரோடு பேசிக்கொண்டிருந்தபோது, அச்சக்கரவர்த்தி வெளிப்படுத்திய மார்க்க அபிப்பிராயத்தை யாவருடைய கவனத்தையுங் கருஷிக்குமாறு இங்கெடுத்துரைக்கின்றோம்.

சக்கரவர்த்தியின் வாய்ப்பிறப்பு:— "நான் பலதடவையிலும் வேதத்தை வெகு பிரியத்துடன் வாசிக்கிறேன். இராமாறு என் பக்கத்தில் ஓர் வேதாகமம் இருக்கிறது. அதில் அருமையான கருத்தடங்கிய பெரும்பான்மையான வார்த்தைகளின் கீழ்க் கோடு கிழித்திருக்கிறது. கர்த்தருடைய வார்த்தையை வாசித்துப் பாராத ஜனங்கள் வெகு பேர் இருக்கிறார்களென்பது என் புத்திக்கு எட்டவில்லை.

நான் எதையும் நினைத்துச் செய்யும்போதெல்லாம் நான் நினைக்கிறதையும் செய்கிறதையுங் குறித்து வேதம் என்ன சொல்லுகிறது என்னுங் கேள்வியை நானே கேட்டுக்கொள்ளுகிறேன். நான் பெலத்தையும் வெளிச்சத்தையும் பெற்றுக்கொள்ளுவதற்கு வேதம் ஒன்றே எனக்கு ஆதாரம். நடுக்கமும் திகிலுமடைந்த நேரங்களில் ஆறுதல் நிறைந்த இந்தப் பொக்கிஷத்தையே பிடித்துக்கொள்ளுகிறேன்''

"ஆண்டவரை விட்டு மருளவிழுந்த அநேகர் திரும்பவும் அவரண்டை வருவார்கள் என்பது என் திட நம்பிக்கை. கிறிஸ்தவ சபையில் பலமான சந்தேகங்கள் எழும்பும்போது அநேகர் தங்கள் விசுவாசத்தைத் தைரியமாயும் சந்தோஷமாயும் அறிக்கையிடத் தூண்டப்படுவார்கள். நமது பெருமையை அடக்கி ஒடுக்கும் நேரங்களாகிய கெத்சேமனே மணி நேரங்கள் நமக்கு நேரிடுவது அவசியம். தாழ்மையாயிருப்பது நமக்கு இலேசான காரியமல்ல, நமக்கு நாமே எஜமான்களாயிருக்கப் பிரியப்படுவோமேயல்லாது பிறர் நமக்கு எஜமான்களாயிருக்கப் பிரியப்படோம்.''



இவ்விதமாய்ப் பேசியபின், சக்கரவர்த்தி சத்திய வேதத்தை ரோமான் கத்தோலிக்கருக்கும் கொடுக்கவேணுமென்கிற தமது விருப்பத்தை வெளியிட்டு, புரோடெஸ்தாந்தருக்கும் கத்தோலிக்கருக்கும் உள்ள முக்கிய வித்தியாசம், பராபரனுக்கும் மனுஷருக்கும் ஒரே மத்தியஸ்தர் புரோடெஸ்தாந்தருக்கிருக்க, கத்தோலிக்கருக்கு அநேக மத்தியஸ்தர் உண்டு என்பதில் தெரியவரும் என்றார்.

## விவசாய விருத்தி. (தொடர்ச்சி.)

ஜப்பான் தேசத்தில் விவசாயத்துக்கு உபயோகமான கால் நடைகளாவது ஆடுகளாவது வெள்ளாடுகளாவது கிடையாது. ஜப்பானில் 30 லக்ஷம் கால் நடைகளும் குதிரைகளுந்தானிருக்கின்றன. இந்த இராஜதானியிலோ நாற்பதுகோடி கால் நடைகளும் ஆடுகளும் வெள்ளாடுகளுமிருக்கின்றன. இப்படியிருந்தும் ஜப்பானில் உண்டாகிற நிலவளம் இத்தேசத்தில் உண்டாவதில்லை. இதற்கு முக்கிய காரணம் என்னவெனில் இத்தேசத்தில் சாணியை விறகுக்குப் பதிலாய் எரிப்பதும் எருவகைகளைச் சரியானபடி சேர்த்துப் பாதுகாக்காமலிருப்பதுமே.

இதுமட்டுமல்ல. இத்தேசத்தில் கிருஷிகர் அதிகமாகக் கடன்பட்டிருக்கிறார்கள். இதனால் அவர்கள் குடி முழுகிப்போக நேரிடுகிறது. ஜப்பானில் கிருஷிகர் கடன்படாதவர்களல்ல. ஆனால் இவ்விரண்டு தேசத்துக் கிருஷிகரின் கடனில் வித்தியாசமென்னவென்றால் ஜப்பான்தேசத்தில் கிருஷிகர் கடன் குடிகெடுக்கும் கடனல்ல. ஊதியம் உண்டாக்கும் கடன். கூட்டுறவுச் சங்கங்களால் கொடுக்கப்படும் கடன். இந்தியாவிலோ அப்படி அல்ல. ஒருவருடன் ஒருவர் சேர்ந்து தொழில் நடத்தும் நாகரீகமுறை தெரியாதவர்களாயிருக்கிறார்கள். முப்பது வருஷங்களுக்கு முன் ஜப்பான் தேசத்துக் கிருஷிகரும் இப்படித்தானிருந்தார்கள். ஆனால் வெகு சீக்கிரத்தில் அவர்கள் விர்த்தியடைந்து விட்டார்கள்.

ஜப்பான் தேசம் எப்படி விவசாய விர்த்தியை யடைந்தது? (1) ஆழமான உழவு அவசியம் என்பது அந்தத் தேசத்துக் கிருஷிகளுக்கு வற்புறுத்தப்பட்டது. அதனால் அவர்கள் ஒன்று அல்லது இரண்டடி ஆழத்துக்கு நிலத்தை உழுதும் கொத்தியும் போடுகிறார்கள். (2) பாத்திகளில் விதைப்பதை விடக் கேணிகளில் விதைக்கும் முறையைக் கைக்கொண்டார்கள். (3) அறுவடையானவுடன் அறுதாள்களை நிலத்தில் மடித்து உழுது எருவாக்குகிறார்கள். (4) ஆறு எழுதரம் பயிரின் ஊடே பயிருழவு செய்கிறார்கள். (5) இதுவன்றி அடிக்கடி நிலத்துக்கு

எருவிடுகிறார்கள். "எருவில்லையானால், விளைவில்லை" என்பது ஜப்பானியருடைய கொள்கை. பயிர்கள் விளைவதற்கு முக்கிய காரணம் நிலம் அல்லவென்றும், நிலம் பயிரைத் தாங்கி நிற்க நாம் போடும் எருவே பயிர்களின் விளைவுக்குக் காரணமென்றும் ஜப்பானியர் எண்ணுகிறார்கள். (6) ஜப்பான் தேசத்தில் ஒரு ஊரிலுள்ள சகல விதக் கழிவுப் பொருள்களையும் ஜாக்கிரதையுடன் கூட்டிச் சேர்த்தும், இத்தேசத்தில் கட்டாந்தரைகளில் அலையவிடுவதுபோல் விடாமல் கால் நடைகளைத் தொழுவில் நிறுத்திப் போஷித்து அவைகளின் எருவைச் சேகரித்து உபயோகித்தும் வருகிறார்கள். சகல வித தாவர வஸ்துக்களையும் பச்சையாகவோ அல்லது மக்கின பிற்பாடோ எருவாக உபயோகப்படுத்தி விடுவார்கள். இவ்விராஜதானியிலுள்ள 40 கோடி கால் நடைகள் ஆடுகள் வெள்ளாடுகள் முதலிய ஜந்துக்களின் உபயோகத்துடனும், தற்காலம் தெருக்களிலும் சந்துகளிலும் சிதறுண்டு கிடக்கும் செத்தை, சருகு, குப்பை முதலியவைகளையும் உபயோகிப்பதாலும் இங்கே எவ்வளவு அதிகமான விர்த்தியுண்டாக்கலாம். ஆகையால் வீட்டுப் புறக்கடைகளிலும் கிராமங்களுக்கு வெளிப் புறங்களிலும் குழிகள் தோண்டி அங்கங்கே சிதறுண்டு கிடக்கும் சகல விதக் கழிவு வஸ்துக்களையும் அந்தக் குழிகளில் சேர்க்கும்படி இத்தேசத்து ஜனங்களில் ஒவ்வொருவருக்கும் மனதில் பதியும் விதமாகப் போதிக்கவேண்டும்.

---

## நூலாய்வு.

### ஆயனும் ஆடும்.

பல்லாண்டுகளாய்க் கதைகள் எழுதிக் கைதேர்ந்த மிஸ்டர் C. அருமைநாயகம் இக்கதைப் புத்தகத்தின் ஆசிரியரென்றறிந்தோர்க்கு இதன் நடை தெளிவும், கதை இனிப்பும், பொருள் சிறப்பும், போதனை உயர்வுமாயிருக்குமெனச் சொல்லாமலே தெரியும். இவ்வரிய நூலைத் தமிழ்நாட்டாரான தெய்வ ஊழியரும் திருச்சபையாரும் வாசித்தறிவதனால் மிக்க பயன்விளையும் என்பதற்கையமில்லை. 146 பக்கங்களுள்ள இந்நூலை வாசிக்கத் தொடங்குவோர் அதை முடிக்குமளவும் அதைச் சற்றேனும் விட்டிருக்க விரும்பார். அதன் பொருளும் நடையும் மனதைக் கவருமாறு, அதன் அச்சுப் பதிப்பும் புத்தகக்கட்டும் கண்ணைக் கவரும்படி அமைந்துள்ளன. விலை 6 அணாதான். சென்னை C. L. S. மானேஜர். Post Box 3. என்ற விலாசத்திற்கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

ஞா. சா.

---



## விசுவாச ஜெயம்.

பலஸ்தீனாவைச் சேர்ந்த கேசாரியா ஸ்திராதோனிஸ் என்ற இடத்தில் வசித்த மரியு என்ற கிறிஸ்தவ போர்வீரன் நூற்றுக்குச் சேர்வைக்காரன் என்னும் பட்டத்தைப் பெறப் போகுஞ் சமயத்தில் அதே அந்தஸ்துக்கு வரவேண்டிய இன்னொரு போர்வீரன் எழுந்து, மரியு என்பவன் கிறிஸ்தவனாயிருப்பதாலும், சக்கரவர்த்திக்காவது, தேவர்களுக்காவது பலியிடாததினாலும் பழைய சட்டப்படி ரோம ராணுவ கௌரவத்துக்கு அடாதவன் என்று சொன்னான். இதைக்கேட்ட மேலதிகாரி, அவன் கிறிஸ்தவனாகவே இருப்பானோ என்பதைக் குறித்து யோசிக்க மூன்றுமணிநேரம் தவணை கொடுத்தான்.

இதற்கிடையில் தியோக்டினாஸ் என்ற தெய்வபக்தியுள்ள கண்காணி மரியுவைக் கோவிலுக்கழைத்துக்கொண்டு போய், அவன் பக்கத்திலிருக்கும் பட்டயத்தையும் தமது கையில் அவனுக்குமுன் வைத்திருந்த சுவிசேஷத்தையுங் காட்டி, இராணுவ மேன்மை, சுவிசேஷம் இந்த இரண்டில் எதைத் தெரிந்துகொள்ளுவாயென்று கேட்க, மரியு சற்றுந் தாமதியாமல் சுவிசேஷத்தைத் தெரிந்துகொண்டான். கண்காணியோ, பராபரனைக் கெட்டியாய்ப் பிடி. நீ தெரிந்துகொண்டதைப் பெற்றுக்கொள்வாயாக, சமாதானத்தோடேபோ என்று சொல்லி அவனை அனுப்பிவிட்டான். பிறகு அவன் தன் தீர்மானத்தை மேலதிகாரிகளுக்குத் தெரிவித்தபோது, சிரசாக்கினை பெற்றான்.

---

## புடமிட்ட உண்மை.

அர்மீனியாவின் ஓரிடத்தில் 45 வாலிபர் செபம்பண்ணக் கூடிவந்தார்கள். அவர்கள் தங்கள் இருதயங்களைப் பராபரனுக்கு முன் ஊற்றிக்கொண்டிருக்கையில் துருக்கிய வீரர் அவர்கள் தனித்திருந்த ஒதுக்கிடத்தை வளைந்துகொண்டார்கள். அவர்கள் கூட்டங் கலைந்து புறப்படுகையில், வாசற்படியில் சத்துருக்களின்பட்டயங்கள் மின்னிக்கொண்டிருப்பதைக் கண்டார்கள். இப்படியிருக்கையில் துருக்கியர் கிறிஸ்தவ வாலிபரை நோக்கிச் சொன்ன ஆலோசனையாவது: இரண்டு இரண்டுபேராக வீட்டை விட்டு வெளிப்படுங்கள். இப்படிப் போகையில் வானத்துக்கு நேரே ஒரு விரலை நீட்டிக் காட்டுகிற எவனுக்கும் சிறு மோசமும் நேரிடாது. ஒன்றில் இப்படிச் செய்யுங்கள் அல்லது வெட்டுண்டு சாகுங்கள் என்பதே.

அவர்களிடத்தில் வார்த்தைகளினால் மறுத்தலையாவது, கிறிஸ்தவ விசுவாசத்தை விட்டுவிடுதலையாவது, அத்துருக்கியர் கேளாமல், ஒருவிரலை உயர்த்தும் ஒரே அடையாளத்தைக் கேட்டார்கள்,

இதனால் மகம்மதுவின் கடவுளாகிய அல்லாவை அறிக்கையிடப் பண்ணுவது அத் துருக்கியரின் நோக்கம். இச் சொற்ப செய்கைகளால் அந்த வாலிபர் தங்களுக்காகவும் நம்மெல்லாருக்காகவும் மரணபரியந்தம் உண்மையுள்ளவராயிருந்த ஆண்டவரை விட்டு விலக வேண்டுமென்று விரும்பினார்கள். ஆனால் வாலிபர் கர்த்தருடைய கிருபையால் தங்கள் விசுவாசத்தில் உறுதியாயிருந்தார்கள். இரண்டு இரண்டுபேராக வந்தும் அவர்களில் ஒருவனாவது தன் விரலை உயர்த்தினதில்லை. எல்லாரும் வெளியே வந்தார்கள். துருக்கியர் அவர்களைச் சுட, எல்லாரும் இரத்த சாட்சிகளாய் மரித்துத் தங்கள் ஆண்டவருடைய சந்தோஷத்துக்குள் பிரவேசித்தார்கள்.

## வர்த்தமான சங்கிரகம்.

அடுத்த காங்கிரஸ் மகா கூட்டம் டிசம்பர் மீ 26 உ அலகபாத்தில் கூடிவரும். இவ்வருஷம் இதில் தலைமை வகிப்போர் சர் உவில்லியம் வெட்டர்பன் என்ற ஆங்கிலேய கனவான். இவர் இதற்கு முன் ஒரு முறை 1889ல் அக்கிராசனம் வகித்தவர்.

டிசம்பர் மீ 28ல் இந்திய நாஷனல் மிசியோனரி சங்கத்தாரும் கடந்த 5 வருஷங்களில் நடந்த தங்கள் சங்கவேலையையும் இனி நடக்க வேண்டிய வேலையையும் குறித்து யோசிக்க அங்கே கூடிவருவார்கள்.

கடந்த செப்டம்பர் மீ 26ல் 1500 அவயவங்கள் கிறிஸ்தவ முயற்சி சங்கசம்பந்தமாய் வேலூரில் கூடி வந்தனர். இக்கூட்டத்தில் மதுரை சாண்ட்லர் போதகர் அக்கிராசனம் வகித்தார். இதற்குப் பஞ்சாப் பம்பாய், ஆசியா கல்குத்தா முதலிய தூரமான இடங்களினின்றும் பக்தி முயற்சிக்கென்றுழைக்கும் பிரபலமான போதகன்மார் பலரும் வந்திருந்தனர்.

லிவர்பூல் பட்டணத்து எஞ்சினீர் மிஸ்டர் தாமஸ் ரேமெண்ட் பிலிப்ஸ் ஒரு ஆகாய யுத்தக் கப்பல் செய்திருக்கிறாராம். அதில் இருந்து கொண்டு 500 மைலுக்கப்பாலுள்ள ஓர் பட்டணத்தின்மேல் மின்சார வெடி குண்டுகளையெறிந்து அப்பட்டணத்தை நிர்மூலமாக்கலாமாம். இவ்வியந்திரம் பிற்கால யுத்தங்களில் பயங்கரமான கருவியாயிருக்குமென்றெண்ணப்படுகிறது.

## 1911-ம் ஹு செமினேரி பிரவேசப் பரீட்சை.

அப்பரீட்சை அவ்வருஷம் ஜெனவரி மீ 24-ம் உ செவ்வாய்க் கிழமை காலை 8 மணிக்கு ஆரம்பிக்கும்.

ஆதலால் அப்பரீட்சைக்கு வருகிறவர்கள்:

1) 23-ம் உ திங்கள் மாலை 4 மணிக்கு Seminary Director அவர்கள் முன்னிலையில் ஆஜராக வேண்டும்.

2) Leaving Certificate அல்லது சர்க்கார் பரீட்சை Certificate ஐக் கையோடு கொண்டு வருபவர்கள் மாத்திரம் பரீட்சிக்கப்படுவார்கள்.

3) மனுக்களை 1910-ம் ஹு டிசம்பர் மீ 15-ம் தேதிக்குள் Seminary Director அவர்களுக்கு அனுப்பவேண்டியது.

TH. MEYNER, *Seminary Director.*

**Printed at the Ev. Luth. Mission Press, Tranquebar, 1910.**

## *Please Register your names for*

The Tranquebar Mission Almanac<br>
The Arunodayam,<br>
Tirupanitholan<br>
The Sunday Friend } **1911.**

Pastor N. SAMUEL,<br>
*Supdt. E. L. M. Book - Depot,*<br>
TRANQUEBAR.

### துக்க செய்தி.

எங்கள் தகப்பனார் நல்லப்ப உபாத்தியாயர் இந்துமார்க்கத்தில் பிறந்து, 1862-ம் ஹு குடும்பத்தோடு ஞானஸ்நானம் பெற்று, முப்பது வருஷமாக மிசியோனில் வேலை செய்து, ஏறக்குறைய பத்து வருஷம்போல் பென்ஷன் வாங்கி, சென்ற அக்டோபர் மீ 30-ம் உ இரவு 8 மணிக்கு மரணமடைந்தார். வயது 94.

ந. யோவான் உபதேசியார்,

றவணியங்கோட்டகம்,

திருக்கடையூர்.

